*(இ -ள்.) உருட்டிய - (தருமபுத்திரன்) உருட்டியாடிய, கவறு - பாச்சிகையானது, நேமி உடையவன் அருளினாலே- (சுதரிசன மென்னுஞ்) சக்கரத்தை ஆயுதமாகக்கொண்டுள்ள திருமாலினது திருவருளினால், மருட்டியசகுனி எண்ணின் வழிப்படாது - மாயஞ் செய்த சகுனியினது விருப்பப்படி உருண்டு விழாமல், உருண்டகாலை-(தருமனது விருப்பத்தின்படியே) உருண்டு விழுந்த சமயத்தில்,- தெருட்டிய உணர்வின் மிக்கோன்- தெளிந்த அறிவுமிக்குள்ளவனாகிய தருமபுத்திரன்,-இருட்டிய விழியான் மைந்தன் இதயம்உம் இருண்டுசோர-இருளின் தன்மையை யடைந்துள்ள கண்களையுடையவனான [குருடனான] திருதராட்டிரனது புதல்வனாகியதுரியோதனனது மனமும் மயங்கித் தளரும்படி, செப்பிய யாவும்- பந்தயமாகக் குறிக்கப்பட்டஎல்லாவற்றையும், வென்றான்- சயித்தான்; (எ - று.)*

*கடவுளருளை முன்னிட்டுக்கொண்டு ஒரு காரியஞ் செய்பவர் வெற்றி பெறுவரென்பது, இதனாற் பெறப்படும். பஞ்சபாண்டவரும் திரௌபதியும் புதல்வரைவரும் முதலியவர்களின் அடிமை எதிரிகள் வைத்த பந்தயப்பொருளாகவும், தனது புண்ணியம் தனது பந்தயப்பொருளாகவுங் கொண்டு தருமன் சூதாடித்திருமாலருளால்வென்றன னென்பதாம்.*

*தெருட்டிய=தெருண்ட; தன்வினைப்பொருளில் வந்த பிறவினை; இனி, திரௌபதியினால்தெளிவிக்கப்பட்ட எனினுமாம். (434)*

### *282.-தம்பிமார் முதலியவருடன்தருமபுத்திரன் திருதராட்டிரன் முதலியோரிடம் விடைபெற்றுக் காட்டிற்குச் செல்லுதல்.*

***வென்றுதன் னிளைஞ ரோடும் மேதகுபுதல்வ ரோடும்***
***மன்றலந் தெரிவை யோடும்மற்றுளோர் தங்க ளோடும்***
***அன்றுதன் குரவர் பொற்றாளன்புடன் வணங்கிக் கானஞ்***
***சென்றன னென்ப மன்னோசெழுநில முடைய கோமான்.***

*(இ -ள்.) செழுநிலம் உடைய கோமான் - பலவகைவளங்களும் நிறைந்த பூமிக்குத் தலைவனானயுதிஷ்டிரராஜன், வென்று (அந்த மறுசூதில் தான்) ஜயித்து, தன் இளைஞரோடும் - தனது தம்பிய ராகிய (வீமன்முதலிய) நால்வருடனும், மேதகு புதல்வரோடும் - மேன்மையை அடைந்துள்ள புத்திரர்களுடனும், மன்றல்அம்தெரிவையோடும் - (தம்மால்) மணஞ்செய்துகொள்ளப்பட்ட அழகிய திரௌபதியுடனும், மற்றுஉளோர் தங்களோடும் - மற்றும் தன்னைச்சேர்ந்த பரிவாரங்களுடனும்,-அன்று - அப்பொழுது,-தன்குரவர் பொன் தாள் - (திருதராஷ்டிரன் முதலியவர்களான) தனதுபெரியோரது அழகிய திருவடிகளை,அன்புடன் வணங்கி - அன்போடு நமஸ்கரித்து, கானம் சென்றனன் - காட்டுக்குச் சென்றான்; (எ -று.)*

*தருமபுத்திரன், வனவாசஞ்செய்யுமாறு கருதி, திருதராட்டிரன் வீடுமன் விதுரன் துரோணன் அசுவத்தாமன்கிருபன் முதலிய பெரியோரிடத்து விடைபெற்று, விதுரனது விருப்பத்தின்படியே தாயான குந்திதேவியைஅவ்விதுரன் மாளிகையிலேயே விட்டிட்டு, தானும் தன் தம்பியர் நால்வரும், தமது மனைவியானதிரௌபதியும், தமது புரோகிதராகிய தௌமியமுனிவருமாகக் காட்டுக்குச் சென்றன னென்ற வரலாற்றைமுதனூலால் அறிக. திரௌபதியின் வேண்டுகோளின்படி தருமன் ஆடிய மறுசூதால் திரௌபதியின்புதல்வர்கள் தாஸபுத்திரர் [அடிமைகளின் பிள்ளைகள்] என்று பிறர் எடுத்துச் சொல்லக்கூடியசிறுமொழியினின்றும் நீங்கி மேன்மைப்பட்டார்களாதலால், அவரை 'மேதகு புதல்வர்'என்றாரென்னலாம். என்ப, மன், ஓ - ஈற்றசைகள். (435)*

### *283.-அப்பொழுதுதுஷ்டசதுஷ்டர்கள் தவிர, மற்றையாவரும் வருந்துதல்.*

***ஒழிவுசெய் கருணை நால்வ ருள்ளமுமொழிய வேனை***
***வழுவறு மன்ன ருள்ள மம்மரோடயர்ந்து விம்மக்***

**குழவிபா னுகர்த லின்றிக்கொற்றமா நகரி மாக்கள்**
**தழலென வுயிர்த்து மாழ்கித்தனித்தனி புலம்ப லுற்றார்.**

*(இ -ள்.) கருணை ஒழிவு செய் நால்வர் உள்ளமும் ஒழிய - கருணையை நீங்கியுள்ள துஷ்டசதுஷ்டர்களது மனம்தவிர, வழு அறு ஏனைமன்னர் உள்ளம் - குற்றமற்ற மற்றையரசர்களது மனம், மம்மரோடு அயர்ந்துவிம்ம - மயக்கங் கொண்டு தளர்ந்துபுலம்பவும்,-குழவி பால் நுகர்தல் இன்றி- குழந்தைகளும்பாலுண்ணாதுதவிர்ந்திருக்கவும், கொற்றம் மா நகரி மாக்கள் - வெற்றிபொருந்திய பெரியஅவ்வத்தினாபுரியிலுள்ள ஜனங்கள், தழல் என உயிர்த்து மாழ்கி - நெருப்புப்போல (உஷ்ணமாக)ப்பெருமூச்செறிந்து வருந்தி, தனி தனி புலம்பல் உற்றார் - தனித்தனியே புலம்புவாராயினர்; (எ - று.)*

*அறிவு நிரம்பாத குழந்தைகளும் வருத்தமிகுதியாற் பாலுண்ணாதிருந்தன எனவே, மற்றையோரது வருத்தம்சொல்லாமலேயமையுமென்பது கருத்து. இதனை, "பான்மறந்தன பசுங்குழவி" என்பதனோடு ஒப்பிடுக. தமதுநகரத்து அரசன் வெற்றிபெற்றிருக்கவும் அந்நகரத்துச் சனங்கள் அவனது கொடுங்கோன்மை யால் அவனிடத்து வெறுப்புற்றிருந்தனரென்பது தோன்ற 'கொற்றமாநகரிமாக்கள் தழலெனவுயிர்த்துமாழ்கி'என்றார். (436)*

### 284.-தருமபுத்திரனது குணத்தின்சிறப்பு.

**நாட்டிடை யெல்லை பொற்றா ணறுமலர்சிவக்க வேகிக்**
**காட்டிடை புகுந்த போதுங்கலக்கமற் றுவகை கூர்ந்தான்**
**கூட்டிடை யின்ப துன்பக்கொழும்பயன் றுய்த்தி மாறி**
**வீட்டிடை புகுதும் போதுமெய்ம்மகிழ் விபுதர் போல்வான்.**

*(இ -ள்.) கூட்டிடை - இந்தவடம்பில், இன்பம் துன்பம் கொழும் பயன் துய்த்து - மிக்க இன்பத்தின்பயனையும் துன்பத்தின் பயனையும் அநுபவித்து, மாறி - (கருமவசப்பட்டிருக்கும்அந்நிலைமையினின்று)நீங்கி, வீட்டிடை புகுதும்போது-முத்தியுலகத்திற் சென்று சேரும் பருவத்தை யடைந்துள்ள, மெய்மகிழ் - உண்மையாக மகிழ்கின்ற, விபுதர்- முக்தர்களை, போல்வான் - ஒப்பவனானதருமபுத்திரன்.-நாட்டிடை எல்லை-நாட்டினிடத்திலுள்ள எல்லைமுழுவதும், நறுமலர் பொன்தாள்-வாசனையுள்ள தாமரை மலர்போன்ற (தனது) அழகிய பாதங்கள், சிவக்க - (அடிவைத்துஊன்றுதலாற்) செந்நிறமடைய, ஏகி - நடந்துசென்று, காட்டிடை புகுந்த போதும்- காட்டிற்குச்சென்றபொழுதும், கலக்கம் அற்று - (மனத்திற்) கலக்கம்ஒழிந்து, உவகை கூர்ந்தான் -மகிழ்ச்சி மிக்கவனானான்; (எ - று.)*

*யானை முதலிய வாகனங்களின் மீது ஊர்ந்து செல்லுந் தருமபுத்திரன் இப்பொழுது கால்களால் நடந்துசென்றானென்பதாம். இதற்குமுன் இவ்வாறு நடந்துசெல்லும் பயிற்சியில்லாமையால், பாதங்கள்செந்நிறமடைந்தன. மோட்சத்தைப்பெறும் பக்குவ நிலைமையை யடைந்த பெரியோர் தமக்குப் பரகதிஎப்பொழுது கிடைக்குமென்று எதிர்பார்த்துக்கொண்டு கடவுளைத் தியானித்தலால் எப்பொழுதும்நிரம்பிய நெஞ்சத்தராய் இவ்வுலகத்து இன்பதுன்பங்களை ஒருபொருட்டாக மனத்திற்கொள்ளாமலிருப்பது போல, தருமபுத்திரனும் இவ்வுலக இன்பதுன்பங்களை ஒரு பொருட்டாக நினையாதிருந்ததனால், அவனை, 'கூட்டிடை இன்பதுன்பக்கொழும்பயன்றுய்த்து மாறி, வீட்டிடைப்புகுதும்போது மெய்ம் மகிழ்விபுதர் போல்வான்' என்றார்; இவ்வாறு இருப்பவர் 'ஜீவந்முக்தர்'எனப்படுவர்; "அரசரோடிருந் துலகவரசாட்சி புரிந்திடினு மங்கையேற்றுத், தெருவுதோறலைந் திரந்துதின்றிடினு மிளம் பருவத் தெரிவைமாரைப், பிரியாமலிருந்திடினு பிரிந்து தவம் புரிந்திடினும்பேசிற்றெல்லாம், விரிசீவன்முக்தருக்கிங்குடம்பாடேயன்றி யொன்றும் விரோதமில்லை"என்பதனால் அவர்களின் தன்மை இன்னதென்பதை யுணர்க. பறவைகள் சிலகாலம் தங்குவதற்கு ஏற்றகூடுபோல, இவ்வுடம்பு, உயிர் சிலகாலம் கூடியிருத்தற்கு இடமாய் நிற்றலால், 'கூடு' என்றேகுறிக்கப்பட்டது. (437)*

### சூதுபோர்ச்சருக்கம் முற்றிற்று.

